# ராதா—கிருஷ்ண

இயற்றியவர்

'தராசு'

விலை 2 அணா

வெளியிட்டோர்

**இயற்கை இல்லம்**

கணேச நகர், புதுக்கோட்டை.

நமஸ்காரம்



சில வருஷங்களுக்கு முன், ஒரு பஜனை கோஷ்டியார் பாடிய ஒரு பாட்டிலிருந்து இந்த நூலில் உள்ள சம்பவம் உருவமாயிற்று. ராதைக்கும் கிருஷ்ணனுக்குமுள்ள ஒரு உயர்ந்த தொடர்பை, அப்பஜனைப் பாட்டிலிருந்து தெரிந்துகொண்டதுமுதல் படிப்படியாக, 'ராதா-கிருஷ்ண' என்னும் இந்நூல் என் மனதில் உருவாயிற்று. நம் மனதில் தோன்றும் நல்லதையோ, அல்லது கெட்டதையோ நமக்கு வேண்டியவர்களிடம் சொல்லுவது சாதாரண மனித இயல்பு. இந்த இயல்புக்கு, என் நண்பர் ஸ்ரீ ல. தியாகராஜ சர்மா உற்சாகமளித்ததால் எழுத்து வடிவில் வந்தது. அதை அச்சேற்றிப் பார்ப்பதில் என் நண்பர் ஸ்ரீ பி. கே. விஜயராகவன் எனக்கு ஊக்கமளித்தார்.

ராதைக்கும்—கிருஷ்ணனுக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தம் பற்றி பல நூல்களிலிருந்து பலவாறு அறிந்துகொண்டிருக்கலாம். இதுவரையில் கேள்விப்படாத ஒரு மேலான கருத்து ஒரு பஜனைப் பாடலிலிருந்து தெரிந்துகொள்ள முடிந்தது. ராதைக்கும் கிருஷ்ணனுக்குமுள்ள சம்பந்தம் இதில் கூறப்பட்டிருப்பதற்கு மாறுபட்ட கருத்துகள் பல இருந்தாலும், இந்தக் கருத்தையும்

ஏற்றுக்கொள்வதில் குறைவு ஒன்றும் ஏற்படாதென்பது என்னுடைய தாழ்ந்த எண்ணம். ராதையை கண்ணன் ஆசீர்வதிக்கும்போது, கண்ணனுடைய கண்களில் ஆனந்த பாஷ்பம் வழிந்தோடியதாக அப்பாடலில் பாடப்பட்டது. சாதாரணமாக கண்களிலிருந்து வரும் ஜலம் உப்புக் கரிக்கும். ஆனல் ஆனந்த பாஷ்பம் இனிக்கும் என்று பெரியவர்கள் சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த இனிக்கும் ஆனந்த பாஷ்பம் எல்லோருக்கும் ஏற்படவேண்டுமென்பது என்னுடைய அவா. உயர்வான விஷயங்களை உயர்ந்த மனோநிலையில் பார்க்கவேண்டுமென்பது பல கிரந்தகர்த்தாக்களின் கருத்தாகும். அதேபோல் ராதா—கிருஷ்ணுவில் உள்ள கருத்தை உயர்வான மனோநிலையில் பார்த்து என்னை ஆசீர்வதிக்கும்படி இதைப் படிக்கும் ஒவ்வொருவரையும் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

என்னுடைய இந்த முயற்சிக்கு, சிறந்த அறிவாளியான ஸ்ரீ கி. லக்ஷ்மண சர்மா அவர்கள் முகவுரை எழுதி என்னை ஆசீர்வதித்தது எனது பாக்யமேயாகும்.

கணேசநகர்,
புதுக்கோட்டை,
ஜூலை '57.

என். ராதாகிருஷ்ணன்,
(தராசு)

# முகவுரை

கிருஷ்ணன் 'உள்ளங்கவர் கள்வன்' என்று அன்பர்கள் அறிவார்கள். நாம் பகிர் முகமாய் (வெளிநோக்குள்ளவர்களாய்) உலகில் ஈடுபட்டிருக்கையில், அக்கள்வன் தன் அருட்சக்தியால் நம் உள்ளங்களைக் கவர்ந்து நம்மைத் தன் நித்தியானந்த சொரூபத்தில் சேர்த்துக் காக்கிருன். அவன் இப்படிக் கள்ளத்தனமாய் வேலே செய்யா விட்டால் யார்தான் அவனே விரும்பி அடைய முடியும்?

புராணங்கள் கோபிகள் கிருஷ்ணனேக் காதலித்து ஞானுனுபவத்தால் அவனேடு ஒன்றின கதையைச் சொல்லுகின்றன. கோபிகளிலும் ராதைதான் தனக்கே இன்ன தென்று விளங்காத ஞானத்தால் தூண்டப் பட்டு, அந்த ஞானமே பிரேமையாக உரு வெடுத்து, கிருஷ்ணனுடன் இரண்டறக் கலந்தாள் என்ற திவ்ய நாடகத்தால் ஸாதுக் கள் தங்களுக்குள்ள பல பொருள்களில் சிதறிப்போன பிரேமையை ஒன்று கூட்டி அதைத் தம் நாதனை கண்ணனிடம் செலுத்திஞல் கடைத்தேரலாம்.

ராதாகிருஷ்ண லீலேயின் உட்கருத்தை அன்பர் ஸ்ரீ ராதாகிருஷ்ணன் தெளிவாக நாடக உருவாக அமைத்து விளக்கியிருக்கிருர். இதைப் படித்து நாம் எல்லோரும் நற்கதி பெறுவோமாக!

புதுக்கோட்டை,
26—7—57.

கி. லக்ஷ்மண சர்மா

# ராதா-கிருஷ்ண

பரமாத்மா கிருஷ்ணனின் வருகையை ராதை எதிர்பார்த்துக்கொண்டிருப்பதைக்கூட சந்திரன் பொருட்படுத்தவில்லை. மறைந்து கொண்டே இருந்தான், சில விநாடிகளில் மறைந்துவிடுவான். அதன் பிறகு ராதை மட்டும் தனியாக இருக்கவேண்டும். இருளுக் கும் ஒளிக்கும் பேதமே தெரியாத நிலையில் இருந்தாள். கோடிசூர்ய பிரகாசம் பொருந் திய கண்ணன் வந்துவிட்டால், இந்த அற்ப இருள் என்ன செய்ய முடியுமென்று ராதை நினைத்திருக்கலாம். யமுனைக் கரையில் உலாவிக்கொண்டிருந்தாள்.

ருக்மணியின் அந்தப்புரத்தில் கண்ணன் வெகு நேரமாக பேசிக்கொண்டிருந்தான். அடிக்கடி இருவரும் வாய்விட்டு சிரிக்கிறார் கள். நிலவு மறைந்ததோ அல்லது இருள் சூழ்ந்ததோ இவர்களுக்குத் தெரியாது. ராதை தன்னை எதிர்பார்த்துக்கொண்டிருப்பாள், தனியாக இருப்பாளே என்பதைக்கூட கண்ணன் நினைத்ததாகவே தெரியவில்லை. ருக்மணியுடன் கண்ணன் இருந்தாலும், ராதையுடன் இருப்பதாகவே சத்யபாமா நினைப்பதுண்டு.

ராதையோடோ, அல்லது சத்யபாமை யோடோ கண்ணனை, ருக்மணி பார்த்துவிட்டால் தாங்கமுடியாத சந்தோஷம்கொள்வாள். அவள் லோகமாதா. ருக்மணியோடோ அல்லது சத்யபாமையுடனே கண்ணன் இருப்பதை ராதை பார்த்தால் அதைக் கண்கொள்ளாக் காட்சியாகவே அனுபவிப்பாள், பண்பட்ட உள்ளம். கண்ணன் ராதையுடன் பேசிக்கொண்டிருப்பதை ருக்மணி பேரின்பமாகவே கருதுவாள். பாவம்! என்று கூட வாய்விட்டு கூறிவிடுவதுண்டு.

ருக்மணியுடன் பேசிக்கொண்டிருந்த கண்ணன் திடீரென்று புறப்பட்டான். இந்த அனுபவம் ருக்மணிக்கு புதிதல்ல. வெகு வேகமாகப் போகும் கண்ணனின் அழகை இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டேயிருந்தாள். யமுனைக் கரைக்கு வெகு வேகமாகத்தான் கண்ணன் வந்தான். தேடினுன். பழக்கமான இடங்களிலெல்லாம் ராதையைக் காணவே இல்லை. ஒரு எண்ணம்...... "ஒரு சமயம் ராதை யமுனையில் குதித்திருந்தாலோ......" கண்ணனால் இதைப் பொறுக்கவே முடியவில்லை. இரு கைகளையும் பிசைந்துகொண்டான். ராதை! என உரக்கச் சத்தமிட்டான். கண்ணனின் குரல் சத்யபாமையின் காதில் தான் முதன் முதலில் விழுந்தது. மனம் முழுவதையும் பொருமை பிடித்துக்கொண்டுவிட்டது. கண்ணனின் குரல் ருக்மணியின் காதில் சோகமாக விழுந்தது. உள்ளத்தில்

தாயன்பு சுரந்தது; ஆனல் ராதையின்காதில் மட்டும் கண்ணனின் குரல் விழவேயில்லை.

தான் போட்ட சப்தத்திற்குப் பதில் வராததால் மறுமுறை சற்று உரக்கவே கூப்பிட்டான். அப்பொழுதுதான் ராதைக்கு இகலோக நினைவு வந்தது பதறிவிட்டாள். கிருஷ்ண! என்னை மன்னிக்கவேண்டும். ரொம்ப நேரமாக என்னைக் கூப்பிடுகிருயா? நீ வந்ததை அறியாமல் இருந்துவிட்டேன். ஏதோ மனமயக்கம். அறியாமல் இருந்து விட்டேன். என்னை மன்னிக்கமாட்டாயா என்றுள் ராதை. கண்ணன் பதில் கூறுவதற் குள் அவனுடைய பாதங்களில் ராதை விழுந்துவிட்டாள். தான் பெரிய தவறு செய்துவிட்டதாகவே ராதை நினைத்தாள் போலும்!

தன் காலடியில் மரம்போல் விழுந்து கிடக்கும் ராதையைத் தூக்கி நிறுத்தவேண்டு மென்ற உணர்வே இல்லாமல் இருந்தான் கண்ணன். மடை திறந்தவுடன் ஜலம் பாய் வதுபோல் கண்களிலிருந்து ஜலம் தாரை தாரையாக வந்துகொண்டிருந்தது. ராதை யின் தீனமான குரல் ருக்மணியின் காதில் விழுந்ததும் லோகமாதா ஆசிபுரிந்தாள். தான் கேட்பது ராதையின் குரலா, அல்லது கண்ணனின் குரலா என்பதுகூட பாமாவுக்கு புரியவில்லை. குரோதமுள்ள மனதில் தயைக் கும், உண்மைக்கும் இடமில்லை. ராதையிடம் தான் கண்ணன் மன்னிப்பு கேட்கிருன்

என்றே பாமா நினைத்தாள். கோபம்கூட வந்தது, 'என்ன வேண்டிக்கிடக்கிறது இடைச்சியிடம் கும்மாளம் அடிக்க, வெட்கம் கூடவா இல்லை.' என பாமா சொல்லி இருக்கலாம்.

தயாபரன், கருணாநிதி என்றெல்லாம் கண்ணனைக் கூப்பிடுவது ருக்மணிக்கு தெரியும். ஆனால் இந்த பேதையை ஏன் இத்தனை சோதனை செய்கிறார். "ஒரு சமயம் சோதனையைத் தாங்காது நடக்கக்கூடாதது நடந்துவிட்டால்..." நடக்காது. காரணமில்லாமல் கண்ணன் தாமதம் செய்யமாட்டார்; இவ்வாறு ருக்மணியின் மனதில் அலைகள் மோதின. அன்புள்ள மனதில்தான் அருள் சுரக்கும். அன்பினால்தான் அன்பைப் பெற முடியும். குரோதமும், கோபமும் கொண்ட மனதில் அன்பு பிறவாது. அன்பானது ஒரு உள்ளத்திலிருந்து மற்றொரு உள்ளத்தில் ஊடுருவிப் பாய்கிறது. இவையெல்லாம் நிரந்தர உண்மைகள்; ஆனால் அப்பொழுதிருந்த மனநிலையில் பாமாவால் இந்த உண்மைகளை யோசிக்க முடியவில்லை.

கண் இமைக்கும் நேரம்கூட இராது. ராதை தலையைத் தூக்கினாள். கண்ணன் ஒரு பெருமூச்சு விட்டான். மனதிலும் திருப்தி தோன்றியது. பளிச்சென்று ஒரு மின்னல்; கண்ணனின் கண்களில் ஜலம் ததும்பி நிற்பதை ராதை பார்த்துவிட்டாள். திடுக்கிட்டாள். கண்ணா! நீ எதற்காக கண் கலங்க

வேண்டும். உன் கண்களில் ஜலம் ததும்பி நான் இதுவரையில் பார்த்ததே இல்லை. நான் பாபி, மஹாபாபி, உன் கண்கள் கலங்கும்படி நான் என்ன தவறு செய்தேன். உன் கண் கலங்கிப் பார்த்த பிறகும்கூட என் உயிர் இன்னமும் இருக்கிறதே! கண்ணா நீ பதில் சொல்லமாட்டாயா! என்றாள் ராதை. மழை பெய்து ஓய்ந்ததுபோலிருந்தது.

உணர்ச்சி வெள்ளத்தில் சிக்கித் தவிக்கும் கண்ணனால் பதில் கூறமுடியவில்லை. காலடியில் கிடக்கும் ராதையை ஒரு முறை பார்த்தான். அதில் கனிவும், சாந்தமும் காணப்பட்டது. தனக்கு மன்னிப்பு கிடைக்கவில்லையே என்ற துக்கம் ஒரு புறம், மறு புறத்தில் பதில்கூட சொல்லாமல் மரம்போல் நிற்கிறானே கண்ணன் என்ற கோபம். இந்த இரு உணர்ச்சிகளினால் உந்தித் தள்ளப்பட்ட ராதையால் சும்மா இருக்க முடியவில்லை. தலையைத் தூக்கி கண்ணனைப் பார்க்கவுமில்லை. பேசாமல் இருக்கிறாயே பதில் சொல்லக்கூடாதா என்று கேட்டுக்கொண்டே கண்ணனை ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டாள். மஹாமேருவே ஆட்டம் கண்டதுபோலிருந்தது. கண்ணனுக்கு சுய நினைவு வந்தது.

ராதை! நீ எந்தவிதமான தவறும் செய்யவில்லை. தவறு செய்யக்கூடியவளுமல்ல. அடியற்ற மரம்போல் சாய்ந்து விட்டாய், அதனால் என்னையே நான் மறக்கும்படியாய்விட்டது. உயிருடன் உன்னை

பார்க்க முடியுமா என்ற சந்தேகம்கூட வந்து விட்டது. நீ தலை நிமிர்ந்து பார்த்த பிறகு தான் எனக்கு உயிர் வந்தது, என்ருன் கண்ணன்.

கண்ணு! பெரிய பாரம் நீங்கியது. இந்த உலகத்தில் இந்தப் பேதைக்கு நீதான் எல்லாம். வெகு நேரமாகக் காத்துக்கொண் டிருந்தேன். ஏதோ ஒரு மன மயக்கம். மான சீகமாக உன்னுடன் பேசுவது போல் ஒரு பிரமை. என்னுடைய வேண்டுகோளை நீ ஏற்றுக்கொண்டுவிட்டது போல் ஒரு கனவு. அந்த இன்பத்தில் லயித்துவிட்டேன். நீ வந்ததைக்கூட கவனிக்கவில்லை. மாயை ரொம்பவும் பொல்லாதது என்பாயே அது எத்தனை உண்மை என்பது இப்பொழுது தான் தெரிந்தது. நான் செய்த தவறுக்காக உன் பாதங்களில் நமஸ்கரித்தேன். உன் பாதங்கள்தானே எனக்கு கதி. வந்தவர்களை 'வா' என்று அழைக்கவேண்டிய வாய் ஊமையானது தவறில்லையா?

ராதை! நீ என்னுடன் மானசீகமாகப் பேசிக்கொண்டிருந்ததாக நினைவு என்ருயே, அப்படியாளுல் நான் கேட்கும் கேள்விக்கு நீ பதில் சொல்லவேண்டும்.

கண்ணு! நீ என்னிடம் கேள்வி கேட்ப தும், நான் பதில் சொல்வதா? நீ பேசுவது விசித்ரமாக இருக்கிறதே! என்னை சோதனை செய்யவேண்டுமென்பது உன் எண்ணமா?

உன்னை புரிந்துகொள்ளும் சக்தி ருக்மணிக்கு மட்டும்தான் உண்டு. என்னை சோதனை செய்ய வேண்டாம்.

உன்னை சோதனை செய்யவில்லை ராதை.

என்னை சோதனை செய்யவில்லையென்றால், எனக்கு தெரிந்தால் பதில் சொல்கிறேன். நான் ஆயர்குலச் சிறுமி.

ஆமாம்! ராதை! குழந்தையின் வாயிலிருந்து வரும் வார்த்தைகள்தான் பரம சுத்தமானது, கல்மிஷமில்லாதது. அது போகட்டும். இரவு நேரத்தில், நல்ல இருளில் என்னைச் சந்திப்பதற்காக யமுனைக் கரைக்கு நீ வருவதைப்பற்றி உன்னை எல்லோருமே இகழ்ச்சியாக பேசியும்கூட, நீ ஏன் பிடிவாதமாக இருக்கிருய்?

கண்ணு! நான் பயந்தேபோனேன். இதைக் கேட்கவா இவ்வளவு பூர்வபீடிகை. இதற்கு நான் பதில் சொல்லித்தான் நீ தெரிந்துகொள்ளவேண்டுமா, ஒவ்வொருவர் உள்ளத்தில் இருப்பதும் உனக்கு தெரியாதா கண்ணு! என்னை பிறர் இகழ்வதையோ அல்லது புகழ்வதையோ நான் லட்சியம் செய்யவில்லை. இரண்டும் ஒன்றுதான். உலகம் போற்றும் தெய்வமான உன்னை சந்திப்பது இகழ்ச்சி என்பது எனக்குத் தெரியாது. இந்த ஆயர்குலச் சிறுமியை நரகத்திற்கு அனுப்பவேண்டும் என்பது உன் விருப்பமா? இல்லாவிட்டால்

நீ இவ்விதமெல்லாம் பேசமாட்டாய். நான் பல ஜன்மங்களில் செய்த பாபம்தான் உன் வாயால் இவ்விதம் கேட்க நேர்ந்தது.

உனக்கு நரகமா? ராதை! இல்லை. இல்லவே இல்லை. உன் பெயரைச் சொன்னவர்கள் • எத்தனை பாபியாக இருந்தாலும் மோக்ஷத்தையே அடைவார்கள். தெய்வமாக இருந்தாலும்கூட எதையும் செய்துவிட முடியாது. நீ கூறுவதுபோல் நான் தெய்வம் என்றே வைத்துக்கொண்டாலும், நான் மனிதப் பிறவி எடுத்திருப்பதால் என்னுல் உனக்கு இகழ்ச்சி ஏற்பட்டது. இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும் பொருட்படுத்தாது, சதா என்னையே சிந்தித்துக்கொண்டிருப்பவர்களுக்கு நானும் என் கடமையைச் செய்கிறேன். என்னிடம் நீ கொண்டுள்ள அன்பு சாதாரணமான அன்பு அல்ல. அது பிரேமை. பல ஜன்மங்களில் செய்த புண்யத்தினுல் தான் ஒரு ஜன்மாவில் பகவானிடம் பிரேமை ஏற்படும். என்னிடம் பிரேமை கொண்டவர்கள் என்னையே சரணமடைவதால், அவர்கள் கேவலம் லௌகிக சுகங்களை என்னிடம் எதிர்பார்ப்பதில்லை. கர்மவினையால் மனிதப்பிறவி எடுப்பவர்கள் திரும்பவும், திரும்பவும் பாபங்களையே செய்கிருர்கள். உன் சம்பந்தப்பட்டவரையில் இனி நீ இருக்கவேண்டிய இடம் இதுவல்ல.

கண்ணு! நானும் ஏதோ ஒன்றை விரும்பித்தானே உன்னை சரணமடைந்தேன்.

அதை எவ்வாறு பிரேமை என்று சொல்ல முடியும்.

ராதை! நீ எதை விரும்புகிருய் என்பது உனக்கே புரியாது, அதுதான் பிரேமையின் நிலே. என்னிடம் நீ பிரேமை கொண்டிருப் பது உனக்கே தெரியாது. பிரேமை என்பது காரண காரியங்களேத் தாண்டியது. உன்னே அறியாமலேயே நீ என்னே நாடி வருகிருய். படிப்படியாய் உலக சம்பந்தம் உன்னிட மிருந்து விலகிவருகிறது. ஆதிமுதல் விவேக மாகவே நடந்துவருகிருய். சஞ்சல குண முள்ள ஸ்திரீஜன்மத்தை எடுத்திருந்தாலும் உண்மையைத் தெரிந்துகொண்டாய். அத் துடன் உன்னிடம் திடச்சித்தமுமிருந்தது. உன்னே நீ அறிந்துகொண்டாய். உன் பாபங்களெல்லாம் போயிற்று. என்னேயும் அறிந்துகொள்ள முடிந்து, என்னிடம் சரண மடைந்தாய். இனி நீ எதை விரும்புவதாக நினேக்கிருயோ, அதை உனக்கு அளிப்பதோ அல்லது மறுப்பதோ அது என் இஷ்டத் தைப் பொறுத்தது. சுக, துக்க, மான அவ மானங்களே விட்டு என்னேயே சரணமடை வதுதான் என்னே நாடுபவர்களின் கடமை. அவ்விதம் பரிபூர்ணமாக சரணமடைந்த பிறகுதான் எனக்கு பொறுப்பு.

கண்ணு! நீ சொல்வதையெல்லாம் புரிந்துகொள்ளும் சக்தி எனக்கு இல்லே. நீ இல்லாதபோது எல்லாமே எனக்கு சூன்ய மாகப்படுகிறது. உன்னேப் பார்க்கும்போது

சூன்யம் மறைந்துவிடுகிறது. நீ போன வுடன் சூன்யம் வந்துவிடுகிறது. இந்த சூன்யத்தில் என்னுல் வாழ முடியவில்லை. எனக்குத் தெரிந்தது இதுதான். சூன்யம் என்னை விழுங்காது நீயே என்னை ஏற்றுக் கொண்டுவிடு.

ராதை! உன்னை ஏற்றுக்கொள்ளவே தான் வந்திருக்கிறேன். உன்னுடைய பிரேமையினுல் என்னை அடையும்போது நீ வேறு, நான் வேறு என்பது இல்லை.

கண்ணு! நான் சிறிது பாக்யம் செய்த வள், என் தவம் பலித்துவிட்டது. எந்த வார்த்தையை உன் வாயால் கேட்கவேண்டு மென்று முனிபுங்கவர்கள் கோடானுகோடி காலம் தவம் செய்கிருர்களோ அந்த வார்த் தையை உன் வாயால் கேட்ட பிறகு வேறு வார்த்தை இந்த செவியில் விழவேண்டாம். என்னை ஏற்றுக்கொண்டுவிடு. பெண்புத்தியி னுல் பல தவறுகள் செய்து இருப்பேன், நீதான் மன்னிக்கவேண்டும். என்ருவது ஒரு நாள் உன்னுடைய கருணை கிடைக்குமென்ற நம்பிக்கைதான் இன்று உன் பாதகமலங் களில் சேர்த்தது. இனி என்னைச் சோதிக்க வேண்டாம். நீதான் எனக்கு எல்லாம்.

ராதை! இனி நீயும் நானும் ஒன்று. பிரேமையினுல் ராதை முக்தி அடைந்தாள் என்ற பெருமை ஏற்படட்டும். ராதையின் பிரேமை கிருஷ்ணனுக்கும், கிருஷ்ணனின்

பிரேமை ராதைக்கும், நம்மிருவர் பிரேமையும் ஒன்று சேர்ந்து 'ராதா—கிருஷ்ணன்' என்ற பெயருடன் விளங்கட்டும். சந்திரசூர்யர்கள் உள்ளவரையிலும், புண்ய நதிகள் உள்ள வரையிலும், லோகத்தில் ஒரு புண்யாத்மா உள்ளவரையிலும், உன்னதமான பிரேமைக்கு உன்னையே உதாரணமாகக் கூறட்டும். பிரேமை உருவமான ராதா—கிருஷ்ணனாக இருந்து லோகத்தை நாம் ஆசீர்வதிப்போம் என்றான் கண்ணன்.

வான வீதியில் ஒரு ஜோதி தோன்றி மறைந்தது.

லோகமாதாவான ருக்மணியின் மனதில் பரம சாந்தி நிலவியது. முகத்திலே புன்னகை படர்ந்தது.





கோவாபரேடிவ் பிரஸ், லிமிடெட். புதுக்கோட்டை.—43

